உ

திருச்சிற்றம்பலம்.

ஏகாம்ரநாதாய நம:

---

# காஞ்சி க்ஷேத்திர மஞ்சரி.



இஃது

திருக்கைலாயபரம்பரை

ஸ்ரீகாஞ்சிபுரம் ஞானப்பிரகாசதேசிக சுவாமிகள் ஆதீனம்

மெய்கண்ட சிவாசாரியார் சந்தானம்

ஞானபீடம்

மஹா சந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ

ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் அவர்கள்

கட்டளைப்படி

## கா-வெ- ஆலாலசுந்தரம் பிள்ளை

அவர்களால்

திரட்டப்பட்டு

சென்னை:

வித்யா பாஸ்கர அச்சியந்திரசாலையில் பதிப்பிக்கப்பட்டது.



விசுவாவசு ௵ பங்குனி௴

1906.

# கவனிப்பு.



சிவநேசச்செல்வர்களாகிய நண்பர்காள்! "நன்மைகடைப்பிடி" என்ற மூதுரையை நன்மைக்குரியாராகிய நாமனைவரும் நன்கு பாராட்டுதல் வேண்டும். நன்மைகடைப் பிடித்தற்கு அறிவன்றியாமோ, அவ்வறிவு கல்விகேள்விக ளன்றியாமோ, அவை நூல்கள் வெளிப்பட்டாலன்றியாமோ, வெளிப்படுதல் செல்வப் பொருளன்றியாமோ. ஆகா, இப்புத்தகத்திற் கண்டிருக்கும் நூல்கள் நெடுநாளைக்கு முன் னொருங்கியனவே யாயினும் பொருளென்னுஞ் செல்வச் செழிப்பில்லாமையான் முட்டின்றி நடைபெறுதற்குத் தடைபட்டன. இனியேனும் நூலியற்றி வெளிப்படுத்தும் ஏமக்குப் பொருளால் மனக்கட்டத்துக் கிடங்கொடாமல் புத்தக விளம்பரத்திற் கண்டிருக்கும் தேவிபாகவத ஸ்கந்தங்களைப் பெற்று அவற்றிற் குரிய கிரயத்தை உதவி செய்வது போற் செய்து ஏனையவும் வெளியாக்கும் சிவபுண்ணியத்தைப் பெறுவீர்களாக. சுபம்! சுபம்!!

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

# * முகவுரை.

---

ஸ்ரீ காமாக்ஷிதேவ்யைநம

"சாந்தோக்யே ஸா புனர் ப்ரஹ்ம புரமித்யேவ வர்ணிதா, அதர்வணேன ஸா ஸ்வர்க்க லோக. ப்ரோக்தோ மஹாபுரீ தைத்திரிய ஜ்யோதிஷா ஸ்வர்க்க ஆவ்ருதோ லோக யிதயபி, நூதப்ரஹ்ம புரமேதத்தி நான்யதகாஞ்சீ புராதிதி, ஸர்வோபநிஷத் பாக. பரவத்தி யாகமைஸ்ஸஹ:"

என்று வேதவேதாந்தங்களில் பரமாகாச மென்றும் பிரமபுரமென்றும் ஜ்யோதி சுவர்க்கமென்றும் சுவர்க்கமென்றும் ஆங்காங்கு பிரதிபாதிக்கப்பட்டதாயும், "ஆருமெய்த்தற கரிதுபெரிதுமேஆற்றலெய்தற் கரிதுபெரிதுமே, நேரு மறியாது நினைப்பரே சித்தமு மறியாது நினைப்பரே, காரு நிறத்தமனார்க்கொரு கமபமே, வாரிருங்குழன் மைவாணெடுங்கண்மலைமகள் மருவிமு கொன்றைத், தாரிருந் தடமார்புநீங்காத்தையலா ளுலகுய்ய வைத்த, காரிரும்பொழிற் கச்சிமூதூர் காமக்கோட்டம்" எனத்திராவிட வேதங்களாற் போற்றப்பட்டதாயும் உள்ளது காஞ்சிநகரம்.

அது அனந்தசக்தி அலுப்தசக்தி அநாதிபோத முதலிய எண்குணங்களை யுடைய அநாதிமுத்த சித்துருவாகிய இறைவனால் விரும்பப்பட்ட நித்ய நைமித்திக காமியமென்னு மூன்றனுள் நித்தியார்ச்சனைப பயனொன்றனையே தருமேனைய வுலகங்களையும் கண்டங்களையும் போலாது, இம்மூன் றருச்சனைப்பயனையு மொருங்கே தரவல்ல திழ்க்கட

---

* இது நான்முகத்துரைக்கும் பொருளே யன்றிநூலின்பெருமை முதலியவை விளங்க அலங்கரித்துரைக்கும் அணிந்துரைபுனைந்துரை என்பவற்றின் பொருளையுங்கொண்டு நிற்பது.

மேற்கடல் சேது இமய மென்னு நாற்பாங் கெல்லைக்குட்ப
ட்ட இப்பரதகண்டத்திற் சிறந்து விளங்குவது,—

அன்றியும் சிவக்ஷேத்திரங்கள் பலகோடியினுள் அவற்
றுட் சிறந்த ஆயிரத்தெட்டினும், அவற்றுட் சிறந்த நூற்
றெட்டினும், அவற்றுட் சிறந்த அறுபத்தெட்டினும் அவற்
றுட் சிறந்த காசியினும் புவனசாரம் மும்மூர்த்திவாசம்
விண்டுபுரம் காஞ்சி லயஜித்து கலிஜித்து சகலசித்தி தபோ
மயம் பிரமபுரம் ஆதிபீடம் கன்னிகாப்பு சிவபுரம் எனவ
ரும் பன்னிரு திருநாமம் புனைந்து காஞ்சியே சால நமக்கினி
ய நகர் என்றிறைவனால் வலியுறுத்திச் சிறந்தெடுத் தோதப
பட்டது,—

பராசக்தியினது ஸ்தன்யத்தினின்றும் பெருகிய க்ஷீர
நதிசங்கமமாகிய கீழ்க்கடற்கரையும், பிநாகத்தினால் வெளி
ப்பட்ட கங்கையாகிய தக்ஷிணபிநாகினியும், அமிர்தசஞ்சீவி
கலந்த சிலாஹ்ருதமும், விரஜாநதி சம்பந்தமுடைய சுவாமி
புஷ்கரணியுமாகிய நான்கெல்லைக்குட்பட்டதும் துண்டீரனா
லாளப்பட்டதுமான துண்டீர மண்டலத்தை இடமாகக்
கொண்டுள்ளது,—

மாவலிச் சக்கரவர்த்தி தவம்புரிந்து பெருஞ்செல்வ
மடையப்பெற்ற மாவலிபுரம், உக்கிரசேனன் தவம்புரிந்து
கன்னிகாரத்னமாகிய தேவகியைப் பெறப்பெற்ற தேவகிபுர
ம், அரம்பை ஊர்வசி முதலாயினாரினுஞ் சிறக்கத்தவம்புரி
யப் பிரமனால்படைக்கப்பெற்ற விரிஞ்சிபுரம், சிவபெருமான்
விடத்தைத் திருக்கரத்திலேந்தத் தேவர்கள் தவம்புரியப்பெ
ற்ற நாகலாபுரம், ஆகிய நான்குதவபுரங்களையும் நான்கு புற
ங்களிற் கொண்டதும் அதனடுவில் பார்வதியாரால் தவஞ்
செய்யப்பட்ட தபோவனத்தை யுடையதுமான காரணத்தா
ல் தபோவனமெனப் பெயர் பெற்றோங்குவது,—

திரிவேணிசங்கம ஸ்நானபலனைத்தந்த த்ரிவேணி சங்
கமநகரம், நடராஜமூர்த்தி நிருத்த தரிசனந்தந்த வியாக்ரபுர
நகரும், விஷ்ணுமூர்த்தி சேஷசயன தரிசனந்தந்த க்ஷீராப்தி

நகரம், நந்திவிரய்க் கங்கையாலமோக்ஷதெரிசனந்தந்த நந்தி கங்காபுரநகரம் ஆகிய நான்கு நகரங்களையும் நான்குயுகங்களிற் கொண்டதும், பிரமனால் யாகஞ்செய்யப் பட்டது பற்றி பிரமசாலை யெனப்பெயர்பெற்றுள்ளது;—

இறந்துபோன தாய் தந்தையர் முதலாயினோரைக் காட்டுகின்றிடம், அமுதநீர் முதலானவற்றைக் கொடுக்கும் மூன்று வேதிகை, நெல்லரியுந்தோறும் மீள மீள விளைதல் முதலிய நான்கு வயல்கள், பிரமன்முதலாயினோரைக்காட்டும் சிங்காதனங்கள், ஒருநாளத்தில் மூன்று தாமரையைக்காட்டல் முதலிய ஐந்து தடாகங்கள், ஏகாம்பரநாதர் வீற்றிருக்கும் ஆம்பர விருக்ஷத்திற்கு வலமிடங்களி லுலாவுகின்ற புறவு நாகணவாய்ப்புள் முதலிய ஆறு பறவைகள், முயல் யானையைத்துரத்தல்முதலிய ஏழுபொதுவிடங்கள், இச்சித்ததையெல்லாந் தருதல் முதலிய எட்டுப்பொய்கைகள், தீண்டினரைத் தேவாக்கல் முதலிய ஒன்பது கற்கள், நவரத்னங்களைப் பொழிகின்ற ஒன்பது சோலைகள், மகாபாதகரை ஊமையாக்கல்முதலிய பத்துச்சுனைகள், பார்த்தவர்பிறப்பு தோன்றுமாறுசெய்தல் முதலிய பதினொரு கூவல்கள் ஆகிய வற்புதங்களைக்காட்டும் அற்புதக்ஷேத்திரமாகியும்,—

கல்விமண்டபம் கணக்கறிமண்டபம் கழைக்கூத்துமண்டபம் ஆயிரக்கால் மண்டபம் ஆடல்மண்டபம் ஆஸ்தான மண்டபம் பாடல்மண்டபம் துலாபாரதான மண்டபம் பரமானந்தமுதலிய மூன்று முத்திமண்டப முதலியவைகளால் பொன்னுலகினும் அழகு பெற்றிருக்கும் அலங்கார நகரமாகியும்,—

மேலும் சத்தியசக்தியர் சத்தியசோதகர் சத்திய சங்கற்பர் சத்தியகாமர்களாகிய சரியைகிரியாயோக ஞானிகள் வாழப்பெற்ற சத்திய விரதக்ஷேத்திரமாகியும்,—

பிரமனுக்கு ஞானோதயமுண்டாக்கிய க்ஷீரகுண்டம் பாலாறு வேகவதி அரித்திராம்பு பம்பை கம்பைமுதலிய சப்ததீ

களும், ததிசிமுனிவர்முதலிய பலர்க்கும் இஷ்டசித்திகளைக் கொடுத்த இஷ்டசித்தி தீர்த்தம் சிவகங்கை மங்கள தீர்த்தம் இந்திர தீர்த்தம் காயரோகண தீர்த்தம் சதாசிவமூர்த்தி சடைமுடியினின்றும் பெருகிய பஞ்ச தீர்த்தம் உருத்திர மூர்த்தியின் ரோமகூபத்தினின்றும் பெருகிய சர்வதீர்த்தம் முதலிய சப்தவார தீர்த்தங்களும், வரதராஜ மூர்த்தி வீற்றிருக்கும் ஹஸ்திகிரிமுதலிய பர்வதங்களும் தர்மார்த்த காமமோக்ஷங்களைக் கோடி கோடியாகத் தரவல்ல காமகோட்டம் முப்புராரிகோட்டம் குமரகோட்டம் கச்சபாலயம் முதலிய ஆலயங்களும் ஆகிய நிபாவ தலயங்களால் சூழப்பட்ட பாஸ்கரக்ஷேத்திரமாகியும்,—

நிலமகட்கு உந்திதானமாகிய காமகோடி முதலிய பிலங்களும், காமாக்ஷிதேவி முதலிய முசசந்திகளும் வழிபடுவதற்கிடமாயுள்ள மாமுருக்கு கூவிளம் முதலிய விருக்ஷங்களும், மேகவாகன மாயிருந்து வழிபட்டுப்பெற்ற திருமாலுக்கு நிலயமாயுள்ள புண்ணியகோடிமுதலிய விமானங்களும் ஆகிய மஹாபில மஹா விருக்ஷ மஹாபுண்ணியகோடி விமானங்களால் முதரிக்கப்பட்ட தைஜஸக்ஷேத்திரமாகியும்,

இருநாழிநெற்கொண்டு முப்பத்திரண்டறங்களு நிலைபெறச்செய்தற்கிடந்தரவல்ல தர்மக்ஷேத்திரமாகியும்,—

அருவுருவங் குறிகுணங்கள் முதலிற கட்டுவீட்டினைத் துமின்றிய, பெருமையதாய் நுணணியதாய்ப் பேருணாவாயானந்தபபிழம்பா யெங்கும், ஒருமுதலாயறிவிச்சை யோகொளியாய் நிறைந்துள்ள பரபிரமமேறும், விரவியுடன் ஒழிற்படுத்துப் புலங்கொளுத்தி வீடுய்க்குமபதி, உய்வண்ணமறியாது இருண்மலத்தி லிருவினையாற பிணிப்புண்டு மருளின்மூழ்கிக் கிடக்கும் ஆன்மாக்களை யிருவினைக்குரிய பிறவிப்படுத்திச் சுவர்க்கநரகாதிகளில் ஊசலெனச்சுழல்வித்து பருவநோக்கி மெள்ள வினைபபயனூட்டி அதுபின் னன்றும் அனுகாவண்ணங்காத்தற்பொருட்டுக் கச்சமேசம

சித்திசம் காயாரோகணம் வீரட்டகாசம் திருவேகம்பம் என்னுமிடங்களில் தோற்ற நிலை யிறுதி மறைப்பு அருளென்னும் பஞ்சகிருத்தியமாகிய தாண்டவம் புரியும் ரக்ஷாதாண்டவக்ஷேத்திரமாயும்,—

சரியை கிரியா யோகங்களா லடையத்தகும் சாலோகாதிபதமுத்திகளுட் சிறந்து சிவஞானத்தாலடையப்படுவதாகிய தின்னிகரில் கேசாந்தமுத்தியாவி தன்சிரத்துக்கபாலங்கிறி, வன்னியினிற் பூவெனப்போய் வாயுவினிற் புவ்வெனப்போ யிரவிமாட்டுப், பின்னாற்று கவ்வெனப்போய் விண்ணாரின் மகவெனப்போய்ப் பிரமத்தொன்றாய், மண்ணிடு மிக்கேசாந்தமுத்தியாகிய துவாதசாந்தமுத்தியினை மெய்ஞ்ஞானிகளையன்றி ஒன்றுணரா மடவோர்கள் விலங்குமரமுதலனந்துமுயிர்போங்காலை மன்றமிசைத் தலையோடுகீறி யுடலவிடுத்தேகுங்கால் வழங்கிடப்பிறவாநெறியளிக்கும் துவாதசாந்தாதீத முத்திக்ஷேத்திரமாகியும்,—

இடையூறகற்றவும் அளிக்கவும் வந்த விநாயகரும், தந்தைமொழிக்கிவர்த்தகனால் வந்த சுப்பிரமணியரும், பிரமகபாலத்தில் திருமால முதலியோ ருதிரமேற்றுப் பூதங்களுக்குப் பகிர்ந்த வயிரவக்கடவுள் முதலிய சிவசூனுக்களும,—

இறைவன் பேராணைவேண்டிவந்த ஹரிஹரபுத்திரரும், கருடனை யானையின்றியலைத்தகனால் வந்த இடபதேவரும்,

சுத்தாசுத்தபுவன பதவதிகாரங்களைப்பெற விரும்பிய அஷ்டவித்யேஸ்வரரும உருத்திரகோடிகளும்,—

முத்தியுலகவாழ்வை விரும்பிய சுவேதன்முதல் இலகுளீசன்றன வெண்ணிறந்த சிவாம்சபூதர்களும்,—

சங்கிழந்த க்ஷீராப்திவாசர், சக்கரம் வேண்டிய வைகுண்டவாசர், லக்ஷ்மி வேண்டியகள்வர், பிரமனைப்பெறவேண்டியமேகவாகனர் வைகுண்டம் வேண்டிய திருமால், புண்ணியகோடி விமானம் வேண்டியவரதர் ஆகிய தமது ரக்ஷக

த் தொழிலுக்குரியன வெல்லாம் பெறவேண்டி வந்த திரு மாலவதார பேதங்களும்,

ஸ்வேத (வெண்மை) நிறமிழந்த சுவேதப்பெருமாள், விஷச்சுவாலை தணியவேண்டியநிலாத்துண்டர், காளாங்கம் (பச்சைசரீரம்) ஒழியவேண்டிய பச்சைவண்ணர், பவளநிறம்வேண்டிய பவளவண்ணர், ஆகிய தமது திருமேனிக்குவந்த இடையூறகற்றிக்கொள்ள வந்த திருமாலவதார பேதங்களும்,

பொய்யுரை கூறியதனால் வந்த சர்பவுரு நீங்கவேண்டிய அனந்தபத்மர், மாமியைக் கொலை செய்ததனால் வந்த சாபம நீங்க வேண்டிய திருமால், மாவலிபாற் களவாடிய தீங்ககல வேண்டியவாமனர், இரணியன் உதிரபானவெறியைபோக்கிய கருணைநாடிவந்த நரசிங்கர், சீதையைக்கொள்ளவதையே வேண்டி பாசுபதம விரும்பிய ஸ்ரீராமர் ஆகிய பொய் கொலை களவு கட காமம் என்கிற ஐந்தும்நிகழவந்தமைக்குப் பரிகாரம் வேண்டி வந்த திருமால் அவதாரபேதங்களும,

உதிர தர்ப்பணஞ்செய்ய விரும்பிய பரசுராமர், அசுரர்களைப பெண்ணுருவால மயக்க விரும்பிய மோகினி, நக்கிரா சுரனோடு பிறந்த ஸ்ண்மரிகளைக்கொலல எட்டுக்கரம விரும்பிய அஷ்டபுஜர், தன்மேனிக்குப் பிரகாசம்வேண்டிய தீபப்பிரகாசர், வேதம அமிர்தம், பூமிஇவைகட்குவந்த இடையூற்றைப் போக்கவிரும்பிய மச்சகூர்ம வராகம், துஷ்ட நிக்ரஹத்தை விரும்பிய கற்கி ஆகியபராக்ரமத்தை விரும்பிவந்த திருமாலவசரபேதங்களும,

சிவநெறியாகிய தவநெறியை அவநெறியாக்கிய புத்தர், சிவபூதங்களின்மீது நின்றும இருந்தும் கிடந்தபூதபந்தகர் அடியாரால்வஞ்சகனென்றிகழப்பட்ட உருகுமுள்ளத்தார், ஆகிய சிவாபராதம போக்கிக் கொள்ளவந்த திருமாலவசர பேதங்களும்,

சிவதீக்ஷை விரும்பிவந்த பலராமர் கிருஷ்ணர் ஆகிய திருமாலவதா

சிவசாரூப்பியம் வேண்டி வந்த, திருமால், படகு முழக்க வேண்டிவந்த விஷ்ணு, மத்தளமுழக்க வேண்டி வந்த மத்தளமாதவர் ஆகிய சிவசம்பந்தமான அடிமைத்திறம் வேண்டிவந்த திருமாலவசர பேதங்களும்,—

சத்தியலோகம் விரும்பிய விதியும், சிருட்டி வேண்டிய அயனும், திருமாலைப்படைக்கவேண்டிய பிரமனும்,

தன்பதம் வெறுத்துச் சிவபதம்விரும்பிய இந்திரனும் சீர்த்தியை யபகரித்துச்சென்ற திருமாலை வெல்லவிரும்பிய இந்திரனும், அவிசுகளைச்சுமக்கும் ஆற்றலை விரும்பிய அக்னியும், தண்டத்தலைமை விரும்பிய இயமனும், பூதாதிகளுக்குத்தலைமைவிரும்பிய நிருதியும், சலத்திற்குந் தலைவனும்பதம்விரும்பிய வருணனும், கந்தவாகனனென்னும் பெயர்விரும்பிய வாயுவும், இழந்தகண்ணையும் இறைவன் றோழமையும் விரும்பிய குபேரனும், திக்குகளிற்சிறந்த ஈசானபதம் விரும்பிய ஈசானருமாகிய அஷ்டதிக்குப்பாலகரும்,—

கண்ணிழந்தபகனும், பல்லிழந்த பகலவனும், கிரணம் விரும்பிய சந்திரனும், முதநியின்பம்வேண்டிய தேவகுருவும், மிருதசஞ்சீவிவேண்டிய அசுரகுருவும், கிரகநிலை விரும்பிய பருதிமுதலிய நவக்கிரகங்களும்,—

ஆதியந்தங் காணக்கூடாத அடிமுடியைக் காணவெண்ணிய அபராத நீங்கவேண்டிய அரிபிரமரும்,—

இறைவன்கொள்ளாத அவிர்ப்பாகத்தைத் தாங்கொள்ள வெண்ணிய வபராதமும், தாங்கொள்ளாத விஷத்தை இறைவன்கொள்ளச் செய்தவபராதமும், நரும்பெருமையை சைக்கமுடியாத தம்மைத் தலைவராக வெண்ணிய வபராதமும் நீங்க வேண்டியதிருமால்முதலிய தேவர்களும்,—

துவாரபாலகராக வெண்ணிய முப்புரர்களும், சிவகணத் தலைமை விரும்பிய வாணனும், முத்தியை விரும்பிய அந்தகன் சலந்தரன் ருமான் காருகனும், மன்மதனைக்கொன்ற இரணியன் இரணியாக்ஷன் மாவலி பிரகலாதன் விரோசனன் முதலிய அசுரர்களும்,—

உற்பத்திக்கும் தானம் கொடுப்பதற்குங் கொள்வதற்கு
ந் தானேயாகி எங்குந் தன்னை விரும்பிய மன்மதனும், சி
வகணத் தலைமை விரும்பிய தக்ஷனும், திருமாலிழந்த சக்கரம்
பெற விரும்பிய விடுவச்சேனனும், பாம்புகள் தன்னைக்கண்
டஞ்சவெண்ணிய கருடனும், கருடன் தங்களைக்கண்டஞ்ச
இறைவனணியாக வேண்டிய ஆதிசேடன் முதலிய பாம்புக
ளும், முத்தியின்பம்வேண்டிய மாகாளனும், தெய்வத்தன்
மை விரும்பிய ரேணுகையும், கருமையுங் கிழத்தன்மையு நீ
க்கிக்கொள்ள விரும்பிய திருமகளும், திருமாலைக் கணவனா
க விரும்பிய திருமகளும், நீராடவந்த பிரமனோடும் திருமா
லோடும் வந்த கலைமகளும், திருமகளும்,—

தமிழ்வழங்கவும் மணக்கோலங்காணவும் விரும்பிவந்த
அகத்தியமுனிவரும், பால்வேண்டிய உபமன்னிய முனிவரு
ம், வச்சிரதேகம் விரும்பிய ததீசிமுனிவரும், நாராயணபர
த்துவஞ்செய்த பாரதநீங்கவந்த வியாசமுனிவரும், அணி
மாமுதலிய சித்திகள்வேண்டிய சித்தர்களும், முத்திவேண்
டிய சத்தரிஷிகளும், அரக்கர்குலத்தை நீறாக்கவெண்ணிய ப
ராசரரிஷியும், திரிகாலஞானம்வேண்டிய முனிவர்களும், மகி
மையறிவானெண்ணிச் சிவலிங்கத்தின்மேற் குளிகைவைத்தி
ருந்த கொங்கணமுனிவரும், பிறப்பையொழிக்கவெண்ணிய
மார்க்கண்டேயர்முதலிய பலமுனிவர்களும், அரம்பையர்
போகம்விரும்பிய துச்சருமேனன் மாண்டுகன்னி முதலிய
முனிவர்களும்,—

எண்ணிய வெண்ணியாங் கெய்திய வரநகரமாயுள்ளது.

இங்ஙனம் ஒப்புவமையின்றித் துண்டீரமண்டலமென
வும், தபோவனமெனவும், பிரமசாலையெனவும், அற்புத
க்ஷேத்திரமெனவும், அலங்காரநகரமெனவும், சத்தியவிரத
க்ஷேத்திரமெனவும், பாஸ்கரக்ஷேத்திரமெனவும், தைஜஸ
க்ஷேத்திரமெனவும், தருமக்ஷேத்திரமெனவும், ரக்ஷா தாண்
டவக்ஷேத்திரமெனவும், முத்திக்ஷேத்திரமெனவும், சிவபு
ரமெனவும், அரிஹரபுத்திரர், இடபதேவர், உருத்திர க்ஷேத்

கள், சிவாம்சபூதர்கள், திருமாலவதார பேதங்கள், திருமாலவசரபேதங்களு, சதுர்முகப் பிரமனுடைய பேதங்கள், அஷ்டதிக்குப்பாலகர், அசுரர்கள், மன்மதன், தக்ஷன், விஷ்வக்சேனன் இவரொழிந்த நாகங்கள், கருடன், ரேணுகை, கலைமகள், திருமகள், அகஸ்தியமுனிவர், முதலியமுனிகணங்கள் ஆகிய இவரெல்லாம் எண்ணிய வெண்ணியாங் செய்தவமபெறும் வரநகரமெனவும், தேசமெல்லாம புகழ்நதாபிங்காஞ்சியின் கண் ஸ்ரீ வித்யா பரமேஸ்வரியாகிய ராஜராஜேஸ்வரியென்னும ஸ்ரீ காமாக்ஷிதேவி திருக்கோயிலகொண்டு வீற்றிருக்கின்றனள்

அவ்வாலயத்தாள் தேவிசம்பந்தமான பீடங்கள் ஆறுயிரத்து நானூறு என்றும், அவற்றுள் அறுபத்து நான்கு பீடங்கள் சிறந்தன வென்றும், அவற்றுள் ஐமபத்தாறு பீடங்கள் சிறந்தன வென்றும் ,அவற்றுள் முப்பத்தாறு பீடங்கள் சிறந்தன வென்றும ,அவற்றுள் பதினெண் பீடங்கள் சிறந்தன வென்றும், அவற்றுள ஓட்யாண பீடம், சாலந்தர பீடம், காமராஜபீடம என்னு மூன்றுபீடங்கள் சிறந்தன வென்றும், அவற்றுள் மிகச்சிறந்து விளங்குகின்ற காமராஜபீடம் நாயகமணியாய் விளங்கி, பிலாகாச ரூபமாயுள்ளதென்றுங் கூறப்பட்டுள்ளது,

பிலாகாசமாகிய அது நாதபிந்து சம்புதம் பரமம் வியோமம் என்றும், ஆகாசசரீரம் பிரம்ஹம் என்றும், சம்புசரீரம் என்றும், பிரத்தியக்ஷம் மோக்ஷதம்பரம என்றும் தேவசின்னம: என்றும் , ஜகத்காம களாகாரம என்றும், குண்டலிநீபுதம் என்றும், ஆதிபௌதிக மர்மாங்கம என்றும், கர்மநகர மென்றும், திவ்யம என்றும், அகக்னம் என்றும், சர்வசித்திதம் தபஸ்தானம் என்றும், சூக்ஷ்மம்பிலம் என்றும், பூயோனி என்றும், காமகோடி என்றும், காமகோஷ்டம் என்றும், வேதங்களாலும் வேத உபப்ராஹ்மணங்களாலுந் துதிக்கப் பட்டிருக்கின்றது.

இந்தக் காமகோடிபீடத்துக்கு வாயு மூலையில் எவவுலகத்தும் எச்சமயத்தும் தழைததோங்கிவிளங்கின்ற லேக்ஷமே

மாவிருக்ஷமாய்த் தளிர் பூங்கனிகளோடு நிழலைச்செய்ய அம்
மூலத்தில் உருவருவறுபல யுண்மையின்மை மற்றிரு
ளொளியன்றி நின்றிலங்கு மகண்டசோதியாய் விளங்குஞ்
சத்தாமாத்திரமாய், உயிர்ப்பினையொடுக்கி விழித்துறங்
கும் யோகியர் அயாசசித்தி கைக்கண்ணோக்கும் சுடரொ
ளியாய் விளங்கும் சின்மாத்திரமாய், எனையோருள்ளத்துப்
பெருவிருளையொழித் துப்பேணிநின்றருவுயிர் முழுவ
தும் ஆட்டும் விளக்கொளியாய் விளங்கும் ஆனந்தமாத்திரமா
ய்ப் பிரகாசிக்கும் அகண்டசச்சிதானந்தப் பிழம்பாய்த்தோ
ன்றி பிரமன் விஷ்ணு ருத்திரர்களால் சேவிக்கப் பட்டு
"பாயுமாவிடைமேலொருபாகனை, காமவின்மதன் பட்ட
அநமடிமே" என்றும், "கரவாடும் வன்னெஞ்சர்க்கரியானை,
இரவாடும் பெருமானை யென்மனத்தே வைத்தேனே" எ
ன்றும், "ஆனைதானுகந்தமுதுசெய்தானை, காலகாலனைக்கம்
பனெம்மானைக் காணக்கண்ணடியேன் பெற்றவாறே" என்
றும் சைவசமயாசாரியர்களாகிய மூவர்முதலிகளாலோதப்
பட்டனவாகிய பல தேவாரமாலைகளேற்று அவருள் திரு
ஞானசம்பந்தசுவாமிகளுக்கு, தவங்கிடந்த திருமாலுக்குச்
சிவசாரூபங்கொடுக்கு மாற்றினும், "மைப்படிந்த கண்ணாளுந்
தானுங்கச்சியேகம்பத்தான் வார்சடையா னென்னினல்லால்,
ஒப்புடையனல்லனொருவனல்லனோரூரனல்லனோருவமனி
லி, அப்படியு மந்நிறமு மவ்வண்ணமு மவனருளே கண்ணாக
க்காணினல்லால், இப்படியனிந்நிறத்தனிவ்வண்ணத்த னி
வனிறைவ னென்றெழுதிக் காட்டொணாதே" என்றதிருநா
வுக்கரசு சுவாமிகளுக்கு எழுதிக்காட்ட வல்ல சிவானுபவவி
ளைவும், "நெய்யும் பாலுந்தயிருங்கொண்டு நித்தம் பூசனை
செய்யலுற்றார், கையிலொன்றுங் காணமில்லைக் கழலடி
தொழுதுய்யினல்லால், ஐவர் கொண்டிங்காட்டவாடி யாழ்
குழிப்பட்டழுந்துவேனுக், குய்யுமாறொன் றருளிச்செய்யீ
ரோணகாந்தன் றளியுளீரே" என்ற சுந்தரமூர்த்தி சுவாமிக
ளுக்கு சிவபோகநுகர்தற் கேதுவாகிய நெய்முதலிய திரவி
யங்களோடு பொன்னுந் தந்தருளிய ஏகாம்பரநாதராலயம்

பிரகாசித்துக் கொண்டிருக்கின்றது. அக்கினி மூலையில் அவ் வேகவதியைப் பெருமாளாலயம் சந்நிதியை நோக்கி நிற்கும் அத்திகிரி நாத ராகியவரதராஜப் பெருமாளாலயம் பிரகாசிக்கின்றது.

இங்ஙனம் மூவராலும் பிரகாசிக்கின்ற அந்தக் காஞ்சி க்ஷேத்திரபிரபாவம் வடமொழியில் ஸ்காந்தபுராணம் சனற்குமார சஹ்றஹிதை காளிகாகண்டத்தில் தீர்த்தமான்மியத்தில் கூறப்பட்டுள்ள ஐம்பத்தைந்து அத்தியாயமாகிய "பஞ்சாசத்" என்கிற நூலினும், சிவபுராணம் பிரமாண்டபுராணம் முதலிய பல புராணங்களினின்றும் சங்கிரகித்துள்ள நூறு அத்தியாயமாகிய "சதாத்யாயம்" என்னு நூலினும் மார்க்கண்டேய புராணம் ஸ்ரீ வித்யாகண்டத்தில் சிறந்தெடுத்துச் சொல்லப்பட்டுள்ள பதினொன்கு அத்யாயமாகிய காமாக்ஷிவிலாசம் என்கிற நூலினும் சொல்லப்பட்டுள்ளது. அம்மூன்றும் மூர்த்தி தலம் தீர்த்த மென்பனவற்றைக் கூறுவனவேயாயினும் பஞ்சாசத் என்கிற நூல் காஞ்சியில் வீற்றிருக்கும் சிவமூர்த்திகளுடைய ஆதிக்கிய பிரபாவங்களையும், சதாத்தியாய மென்கிற நூல் தலம் தீர்த்தமென்கிற இவ்விரண்டின் ஆதிக்கிய பிரபாவங்களையும், காமாக்ஷி விலாச மென்கிற நூல் காமாக்ஷி தேவியினுடைய பிரபாவத்தையும் விதந்து சிறப்பாக வெடுத்துக் கூறுகின்றன இவ்வுண்மை அந்நூல்களைக் கண்ணுறுங்கால் விளங்கும்.

வடமொழியிலுள்ள இம்மூன்று நூல்களுள் பஞ்சாசத் என்னும் நூல் திராவிடமகாபாஷ்ய கர்த்தராகிய ஸ்ரீ சிவஞான யோகிகளாலும், சதாத்யாயம் என்னும் நூல் மேற்படி ஸ்ரீ சிவஞானமுநிவரின் மாணாக்கராகிய கச்சியப்ப முநிவராலும் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுக் காஞ்சிப்புராணமென வழங்கிவருகின்றது. தமிழில் வந்த அந்தக்காஞ்சிப்புராணத்தை யச்சிட்டவர்கள் நூலாசிரியராகிய இருவரும் வடமொழியாகிய முதனூல்களைக் கொண்டியற்றினாரென்பதை யறிவதற் கிடனில்லாமற் பேணமையாலும், இருவரும் ஆசிரியர் மாணாக்கரா யிருந்தமையாலும், இருவரும் காஞ்சி மான்மியத்தையே சொன்னமையாலும், முதற்பாலா

டம் இரண்டாங்காண்ட மெனப்பெயரிட்டு வெளியாக்கினர். அதனுண்மையை நோக்குங்கால் இரண்டுந் தனித்தனிப் புராணங்களென்றே வெளியாகின்றன. ஆகவே, ஒரு நூற் சம்பந்தத்தைக் காட்டும் திருவிளையாடற் புராணக் காண்டங்களைப் போல இக்காண்டங்களாகா.

சிதம்பர க்ஷேத்திரத்துக்குக் கோயிற் புராணம், சிதம்பரபுராணம் எனவும், மதுரை க்ஷேத்திரத்துக்குத் திருவிளையாடற் புராணம், கடம்பவன புராணமெனவும் ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாமல் ஒன்றற்கே ஒன்று இரண்டு பலவாகப் பலபுராணங்களிருப் பனபோலும் காஞ்சி க்ஷேத்திரத்துக்கும் முதற்காண்டம், இரண்டாங்காண்டமெனக் குறிக்கப்பட் டிருப்பதை யிரண்டு புராணங்களாகக் கொள்வதே முறைமையா மென்றுணரக் கிடக்கின்றன. நிற்க.

காஞ்சிப்பிரபாவத்தை விளக்கிய மூன்று நூல்களுள் காமாக்ஷிதேவியினுடைய பிரபாவத்தை விளக்கவந்த காமாக்ஷி விலாசமென்கிற நூலிதுவரையில் வெளிப்படாமலிருந்தமையால் அந்நூலை உரையளவையான் விளங்கத்தக்க ஏனை யிரண்டு நூல்களைப் போலல்லாமல் யாவர்க்குமிகவெளிமையுடையாய் விளங்கத்தக்க வசனநடையில் வெளியாக்குவதே மிகவும் நன்மையாமென்று எமக்குவேண்டிய பலர் அபிப்பிராயப்பட்டமையான் அவ்வண்ணமே வெளியிடலாயிற்று.

வடமொழியினும் தென்மொழியினும் உள்ள காஞ்சிப் புராணங்களில் காஞ்சியிலுள்ள சிவமூர்த்திகள் இவரிவரென்பதும், தீர்த்தங்களிவையிவையென்பதும் இவ்விவ் விடங்களில் இருக்கின்றன வென்பதும், பூசித்தோர் இவரிவ ரென்பதும் ஒருசேரக் கண்டு தெளிதல் அருமையாக விருக்கின்றமை யானும், க்ஷேத்திர தரிசனத்தை விரும்பி வருவோர் புராணங்களைப் பார்ப்பதும் முன்கூறியமூர்த்தி, தலம், தீர்த்தங்களிருக்குமிடங்களைக் காணப்பெறுவதும், ஆங்காங்குச் செல்லும் மார்க்கங்களை யறிந்துகொள்வதும், அருமையினும் அருமையாய்த்தரிசனஞ் செய்வதை யிழந்து போகின்றமையானும் அந்தக் கஷ்டங்களெல்லாம் அன்பர்கட்கு நிவிர்த்தி செய்வித்தல் பெரிய சிவபுண்ணிய மெனக் கருதி காஞ்சி சிவக்ஷேத்திரவிளக்கமென்கிற ஒருசுருக்கமும் இந்நூல் காமாக்ஷி லீலாபிரபாவத்துடன் வெளியிடலாயிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# காஞ்சிக்ஷேத்திரமஞ்சரி



ஆய நானிலத் தமைதியிற் றத்தமக் கடுத்த
மேய செய்தொழில் வேறுபல் குலங்களின் விளங்கித்
தீய வென்பன கனவிலு நினைவிலாச் சிந்தைத்
தூய மாந்தர்வாழ் தொண்டைநாட் டியல்பு சொல்வரைத்தோ

ஈண்டு தீவினையாவையுநீக்கி யின்பமேதரும் புண்ணியதீ
ர்த்தம், வேண்டினார் தமக்கிட்டசித்தியதாய் விளங்குதீர்த்த
மனமங்கலதீர்த்த, நீண்டகாப்புடைத் தீர்த்த மூன்றுலகினி
ற்சிறந்தசர்வ தீர்த்தமுமுதலா, ஆண்டுநீடிய தீர்த்தமெண்
ணிலவு மமரநாட்டவ ராடுதலொழியார்.

என்று சேக்கிழார் பெருமானும்,

இப்படி யூரவரு மெய்திய திறஞ்
லொப்பன போல வுரைத்திட லொப்போ
அப்பதி யேயத னுக்கிணை யன்றிச்
செப்பரி தாம்பிற சீர்கெழு காஞ்சி.

வானோர்க்கிருக்கு மூலமென்னவு மன்னவன் செங்
கோனோர்க்கிருக்குங் குடியென்னவுங் கோதி லும்ப
ரானோர்க்குநான்கு ருலகோர்க்கு மவனி யோர்க்கு
மேனோர்க்குநாடு நகராகி யிருந்த தவ்வூர்.

என்று கச்சியப்ப சிவாசாரியரும்,

எந்நாட்டிற் பெருவளமு மெவ்வெவர்கோட் பாடுகளுமி
மமையவல்லி, பொன்னாட்டும் பொன்செருக்கும் பன்னாக்குப்ப
ணிச்செருக்கும் போக்குவித்த, நன்னாட்டுப் புலவரெலாந

தொண்டைநா டெனவுரைப்பர் ஞாலமங்கை, தன்னுட்போ
தனையமுகக் கனிவாயாங் காரணத்தின் சார்பாற்போலும்.

சலதியுடைச் சேயிழைக்குத் தமிழ்நாடே மதிமுகமாத்
தமிழ்நாட்டுள்ளும், அலர்புகழ்த்தண் டகநாடேகனிவாயா வத
னுளுஞ் சாதிபேதங், குலவுமா றுயிர்க்கெல்லாந் தத்தமது
மரபொழுக்கங் குடங்கைசேரா, மலகமெனத் தேற்றுதலி
ன்வெனலாங் காஞ்சிநகர் வண்மைசொல்வாம.

என்று சிவஞானமுனிவரும்,

மருமலர்ப் பசும் பொதும்பரிற் பண்பயில் வரியளிமுர
ன்றிடும், பொருவிகந்தசீர்க் காஞ்சிநீ டெல்லையு ளாகமபுரா
ணங்கள், சுருதிநூலெடுத் தியம்பிடப்பட்டன தொழுபவா
நடைகளெல்லாம், இருமைவாழ்வருள் கடவுளிருக்கைக ளெ
ண்ணிறந்தன வோங்கும்.

செயபரும்புகழ் பூண்டமற் றவற்றினுட் சினகரமுள
வான, முப்பதிற்றுமூன் றிரட்டியபத்துநா றெண்பட்டு மு
றைசான்ற, வப்பெருநகரு தளிகளுட்பனிவரை யணங்கு பு
ன்முலைதோய்ந்த, துப்புவார்சடை யண்ணலார்த்தளிக ளோட
புரட்டியா யிரஞ்சூழல்.

காமக்கோட்டத்தி னிருந்தறம் புரிந்தருள் காமநோக்கு
டை மென்பூந், தாமப்பூங்குழ லம்பிகைக்குரியநற் சத்திகளா
மாகின்ற, வேமகோயில்க ளோரெழுநூறுமாயிர மெரிதவழ் சுடரா
ழி, நாமத்திண்படை நாயகனிருக்கைமுந் நான்குபத்துறழ்
நூறே

உலகெலாந்தரு நான்முகற் கொருபதி னாயிரத்தெழு
நூறு, இலகுமுக்குடை யானவற் கொன்பதினாயிரத் தெழு
நூறாற், றிலைமைசால்புகழ் புத்தனுக்கெட்டுறழாயிரஞ் சகம்
போற்றக், குலவுகொற்றவை வயிரவன்சாத்தனுக் கொவ்
வொரா யிரங்கோயில்.

மயங்குநெட்டிலை வேற்படைப் பண்ணவன் வாணிலாப்
பிறைக்கோட்டால், உயங்கவெம்பகை முடித்திரு ளோங்குருத

தொருமுத லியர்வானத், தியங்குசெங்கதி ரிருக்கைகள்
வேறுவே றைந்துநா றெனச்சொல்வர், தயங்குமேதகை
யனநதன்னாழ் மந்திரஞ் சாற்றிலிங் கொருநூறே

ஆரிருளறுக்கு மின்ன வறுபத்தா றுயிரத்த
சீரியநல்லிக ளுள்ளுந திருவிழாச் சிறப்பின்மல்கும்
ஏரியல்வரைப்பு நாலாயிரத்துநா னூற்று நாற்பத்
தீரொருநான்கு மன்னுமென்மனார் புலவர்மன்னோ

என்று கச்சியப்ப முநிவரும்,

கூறிவந்த சிறப்பினால் தொண்டைநாடானது தீய வெ
ண்பன கனவிலு நினைவிலாச சிந்தையிற சிறந்த சான்றோ
ரையுடைத்தாகிய சிறப்பினையுடைத்தெனவும, போகலோக
வாசிகளாகிய தேவரும் தமக்கு அங்குவரும துன்பங்களைஸ்
நானமாத்திரத்தில் போக்கிக்கொண்டு இன்பத்தில் வாழவெ
ண்ணிவரும் தீர்த்தங்கள் பலவுடைத்தாகியமகிமையையுடை
த்தெனவும், பொன்னூட்டுப்புலவராகிய வியாழபகவானும,
பன்னாக்குப் பாம்பரசாகிய ஆதிசேடனும் இத்தன்மைத்தா
மென்று மதிக்கவும் சொல்லவுங்கூடாத பெருவளத்தையுங்
கோட்பாடுகளையும் உடைத்தாகிய அற்புதத்தையுடைத்தெ
னவும், பரந்தபூமண்டலத்தை யுடம்பாகப்படைத்த பூமிதே
வி தமிழ்நாட்டை முகமாகப் படைத்ததுபோலும், தண்ட
காரண்ணியத்தை வாயாகப்படைத்தது போலும், படைக்
காது அவ்விரண்டினுஞ்சிறந்த நாசியாகப் படைத்துள்ளதா
கிய நன்மையுடைத்தெனவும், இங்ஙனமான சிறப்பினாலே
னும், மகிமையினாலேனும், அற்புதத்தினாலேனும், யாநலத்
துள்ளதூஉ மல்லாத நாநலத்தினாலேனும ஒப்புமை சொல
லுதற்கரிமை யுடைத்தாகிய பதித்தன்மையுடைத்தெனவும்
உம்பரும் நாகரும் பூவுலகினரும் ஏனையரும தாங்கள்வாழு
ம் நகரங்களை நகரங்களாக நாடுதற்குச்சிறிதுமிடங்கொடாம
ல்அவற்றையெல்லாம் காடாகவெண்ணச்செய்து அந்நாடுகட்

கெல்லாம் தன்னையே நகரமாக வெண்ணச்செய்யும் வன்மை யுடைத்தாகிய திண்மையுடைத்தெனவும் விளங்கிற்று.

சூரியப்பிரகாசத்தைத் காட்டும பலகிரணங்கள்போல இவ்விளக்கத்திற்குப் பிரகாசமாக எண்ணிடற்கரிய சிவாலயாதி பலதேவாலயங்கள் உள்ளனவெனவும், அவ்வளவுங் காண்டற்கரியனவெனவும், அவற்றுள் காண்டற்குரியனவாய் விளங்குவன அறுபத்தாறாயிரமெனவும் அவற்றுள் திருஞானசம்பந்தப் பெருமானருளிய பதினாறாயிரந திருப்பதிகங்களையேற்று ஆங்காங்கு திருகோயில் கொண்டிருக்கும சிவமூர்த்திகளெல்லாம் ஒருங்கு திரண்டுள்ளா ரென்றெண்ணச் சிவாலயங்கள் பதினாறாயிரமெனவும், தேவியினுடைய பரிவார சத்திக ளாலயம் ஐயாயிரமெனவும, கணேசராலயம் ஐந்நூறெனவும், முருகக்கடவுளாலயம் ஐநநூறெனவும, விஷ்ணுவாலயம் பன்னீராயிரம் அனவும், சூரியமூர்த்தியினாலயம் ஐந்நூறெனவும், பிரமனாலயம பதினாயிரத்தெழுநூறெனவும், துர்க்கை, வைரவர், சாத்தன் இவர்கட்குத்தனித்தனி ஆயிரமெனவும், புத்த தேவதைக்கு எண்ணாயிரமெனவும், அருகனுக்கு ஒன்பதினாயிரதெதழுநூறெனவும, அநநதனுக்குநூறெனவும் தெரியவநதன.

இவற்றுள் இக்காலத்தில் பிரமன் புதநதன் அருகன் அநநதன் முதலாயினார் இவர்களுடைய ஆலயங்கள் உண்டென்பதற்குச் சிற்சிலவிடங்கள் ஆங்காங்கிருக்கின்றன. ஏனைய சூரியன் முதலியோருடைய ஆலயங்களும அவ்வளவேயுள்ளன. பிரசித்தமாயுள்ளன சிவாலயங்களும் விஷ்ணுவாலயங்களும் சத்திஆலயங்களுமேயாம்; இவ்வாலயங்களிருக்குமிடங்களைக் காண்பதும் இப்பொழுது அருமையே. ஆகலான் தமிழ்க் காஞ்சிப்புராணத்தினும் இதற்கு முதனூலாகிய வடமொழிப் பஞ்சாசத்தென்னும் நூலினும் கண்டவாறு கோயில்கொண்டிருக்கும் சிவபெருமான் திருநாமங்களும ஏனையவும் இனி வருமாறு காண்க.

சிவகுமாரர்களால்பூஜிக்கப் பட்டவர்.

1 அநேகபதேச்வரர்
2 சேனாபதீச்வரர்
3 காதம்பரேச்வரர்
4 பைரவேச்வரர்
5 மகாசாச்தேச்வரர்
6 வ்ருஷபேச்வரர்

புருஷார்த்தங்களால்

7 தர்மசித்தீசவரர்
8 அர்த்தசித்தீச்வரர்
9 காமசித்தீச்வரர்
10 மோக்ஷசித்தீசவரர்

யுகங்களால்

11 க்ருதயுகேசவரர்
12 த்ரேதாயுகேச்வரர்
13 துவாபரயுகேசவரர்
14 கலியுகேசவரர்

வேதங்களால்

15 வேதரூபேசவரர்
16 அத்தியாபகேச்வரர்

திக்பாலகரால்

17 சக்திநாதேச்வரர்
18 வன்மீகநாதேசவரர்
19 வன்னீச்வரர்
20 யமேச்வரர்
21 நிருதீச்வரர்
22 வருணேச்வரர்
23 செவந்தீச்வரர்
24 குபேரீச்வரர்
25 கைலாசநாதேச்வரர்

நவக்கிரகங்களால்

26 சூரியேச்வரர்
27 சந்திரேச்வரர்
28 அங்காரகே ,,
29 புதே ,,
30 பிரகஸ்பதி ,,
31 சுக்ரேச்வரர்
32 சனீஸ்வரேசவரர்
33 ராகுவேச்வரர்
34 கேதுவேச்வரர்

அசுரர்களால்

35 சுசீலேச்வரர்
36 சுதர்மேச்வரர்
37 சுபுத்தீச்வரர்
38 பாணேச்வரர்
39 ஓணேச்வரர்
40 காந்தேச்வரர்
41 சலந்தரேச்வரர்
42 அந்தகேச்வரர்
43 ஹிரண்யகசிபேச்வரர்
44 ஹிரண்யாக்ஷீதேச்வரர்
45 பிரகலாதேச்வரர்
46 மாவலீச்வரர்
47 விரோசனேச்வரர்

அமரர்களால்

48 பஞ்சிகண்டேச்வரர்
49 விஷகண்டேச்வரர்
50 ஜராஹரேச்வரர்
51 த்ருணேச்வரர்
52 சொர்ணலிங்கேச்வரர்
53 மஹாலிங்கேச்வரர்
54 சாயாரோஹணேச்வரர்

விஷ்ணுபரிவாரங்களால்

55 காமேச்வரர்
56 விஷ்வக்சேனேச்வரர்
57 கருடே ,,
58 சீதே ,,
59 லக்ஷ்மணே ,,
60 விபீஷணே ,,
61 சுக்ரீவே ,,
62 அநுமந்தே ,,
63 மாதலீசவரர்

64 தக்ஷேச்வரர்
65 தக்ஷபுத்ரேச்வரர்
66 ஐராவதே ,,
67 சித்தே ,,
68 முக்தி ,,
69 ரேகாவதி ,,
70 ரேணுகி ,,
71 சுவயம்புவே ,,
72 மதாகரனே ,,
73 பஞ்தரே ,,
74 பணமணி ,,
75 வாலீ ,,
76 ஹரிச்சந்திரே ,,
77 தர்மே ,,
78 பீமே ,,
79 அருச்சுனே ,,
80 நகுலே ,,
81 சகாதேவே ,,
82 பாஞ்சாலிகே ,,
83 த்ருஷ்டத்யும்னே ,,
84 சிகண்டி ,,

வ்ருஷிகளால்

85 மார்க்கண்டேச்வரர்
86 சுவயம்பேச்வரர்
87 மிருத்யுஞ்ஜயே ,,
88 அபுனர்ப்பவே ,,
89 முக்தி ,,
90 ஜைகிஷவ்யே ,,
91 இஷ்டசித்தி ,,
92 ஹயக்கிரீவே ,,
93 அகத்தி ,,
94 திரிகாலக்கியானே ,,
95 வியாசசாந்தி ,,
96 மதங்கே ,,
97 மாண்டுகன்னி ,,
98 சௌனகே ,,
99 நாரதே ,,

சப்தருஷிகளால்

100 பார்க்கவேச்வரர்
101 கவுச்சகேச்வரர்
102 வசிஷ்டே ,,
103 கவுதமே ,,
104 காசிபே ,,
105 ஆங்கிரசே ,,
106 பராசரே ,,
107 தௌமியே ,,
108 பஞசதபே ,,
109 சுகி ,,
110 கௌசிபே ,,
111 உக்ரேச்வரர்
112 கௌசிகேசவரர்
113 வீதகவ்யேச்வரர்
114 நாகே ,,
115 த்ரைதகசிபே ,,
116 வியாசே ,,
117 பௌஷ்குச்சே ,,
118 குச்சகே ,,
119 உரோமசே ,,
120 மௌத்கல்யே ,,
121 முற்கலே ,,
122 கூரே ,,
123 பிரம்ஹே ,,
124 புண்ணியகோடி ,,
125 பிரவாளே ,,
126 வீரட்டானே ,,
127 கிருபாநாதே ,,
128 தாளிவனே ,,
129 குரங்கணி ,,
130 ஜீவத்பாகே ,,
131 கைலாயநாதே ,,
132 கண்ணி ,,
133 பச்சமே ,,
134 அஷ்டபுஜே ,,
135 ஆதிபதி ,,

136 நரசிம்மேச்வரர்
137 மாயமோகினீசவரர்
138 விஷ்ணுவே ,,
139 மத்தளமாதவே ,,
140 அனந்தபதமநாபே ,,
141 அரிசாபபயஹரே ,,
142 மச்சி ,,
143 கச்சபே ,,
144 வராஹே ,,
145 சரபே ,,
146 அபிராமே ,,
147 பரசுராமே ,,
148 வீரராகவே ,,
149 ராமே ,,
150 பலராமே ,,
151 பாண்டவதூதே ,,
152 கிருஷ்ணே ,,
153 கற்கி ,,
யோகாசாரியர்களால்
154 சுவேதேச்வரர்
155 சுவேதகேதேச்வரர்
156 சுவேதசிகேச்வரர்
157 சுவேதாஸ்வேச்வரர்
158 சுவேதலோகேச்வரர்
159 சுதாரேச்வரர்
160 துந்துபேச்வரர்
161 சதருத்ரேச்வரர்
162 ருசிச்வரர்
163 கேதுமானேச்வரர்
164 விகேசேச்வரர்
165 தருகேச்வரர்
166 விசாபேச்வரர்
167 மகாசாபநாசனேச்வரர்
168 சுகோத்ரேச்வரர்
169 சுமுகேச்வரர்
170 துர்முகேச்வரர்
171 துர்த்தமேச்சுவரர்
172 துரதிக்கிரமனேச்வரர்
173 சநாதனேச்வரர்
174 சநந்தனேச்வரர்
175 சனற்குமாரேச்வரர்
176 நிர்மானேச்வரர்
177 நிர்மமேச்வர்
178 நிரகங்காரேச்வரர்
179 விரேதேச்வரர்
180 ரக்ஷோபேசுவரர்
181 சர்வக்ஞேசவர்ர்
182 சிததேஜேசவரர்
183 சத்தியஸ்ஸத்தியே
184 தபாஜடேச்வரர்
185 சமபுத்திசவரர்
186 வாக்மீசவரர்
187 வாலகில்யேச்வரர்
188 கௌதமேச்வரர்
189 அத்ரீச்வரர்
190 ருத்ரதபேசுவரர்
191 ஸ்ரவணேச்வரர்
192 அவிஷ்டகேச்வரர்
193 த்ரையாருணீச்வரர்
194 அவனேச்வரர்
195 உசனேச்வரர்
196 பிரகஸ்பதிச்வரர்
197 உசத்தியேச்வரர்
198 வாமதேவேச்வரர்
199 சிகண்டேச்வரர்
200 க்ருதக்ஞேச்வரர்
201 வாஜஸ்ரவேச்வரர்
202 மகாகாயேச்வரர்
203 மகாநீலேச்வரர்
204 நிரஞ்சனேச்வரர்
205 ஸ்வகிர்தநீசவரர்
206 நீஸ்வரேச்வரர்
207 விஸ்வேச்வரர்
208 ஜடாமாலீச்வரர்

209 மஹாநபேச்வரர்
210 ஹிரண்யநாபேசவரர்
211 கௌசல்யேசவரர்
212 லோகாக்னேச்வரர்
213 க்ருதமேச்வரர்
214 அட்டகாசேசவரர்
215 சுமந்தேச்வரர்
216 பாதரீச்வரர்
217 குசிகந்தீச்வரர்
218 பிரக்ஷேசவரர்
219 தாக்ஷாயணேசவரர்
220 க்ரதுமானேசவரர்
221 லாங்கலீஹலீசவரர்
222 பல்லவீசவரர்
223 மதுபிங்கேச்வரர்
224 ஸ்வேதரேசவரர்
225 உசிஜேச்வரர்
226 த்ருணபிந்தேச்வரர்
227 சுதாமேச்வரர்
228 மதநேச்வரர்
229 வ்ரஜேச்வரர்
230 சங்கேச்வரர்
231 கபிலேச்வரர்
232 பைலேச்வரர்
233 பராசரேச்வரர்
234 கர்க்கேச்வரர்
235 ஜைகஷ்யேச்வரர்
236 பார்க்கவேச்வரர்
237 சுரூதீச்வரர்
238 சகோரேஷச்வரர்
239 மேஷாக்ஷீச்வரர்
240 மேகவாகனேச்வரர்
241 அங்கிரேச்வரர்
242 பாடபேச்வரர்
243 மேதுசிருங்கேச்வரர்
244 ஸ்ருகோத்ரேச்வரர்
245 பலபந்தேச்வரர்
246 நிராமித்தேச்வரர்
247 ஸ்த்ரிதாமேச்வரர்
248 தபோதனேச்வரர்
249 லம்போதரேச்வரர்
250 லம்பாக்ஷேச்வரர்
251 விளம்பேச்வரர்
252 லம்பகேச்வரர்
253 வசிஷ்டேசவரர்
254 காசிபேச்வரர்
255 ராதேச்வரர்
256 பிரம்ஹதத்தேசவரர்
257 பைரவேச்வரர்
258 காலத்யேச்வரர்
259 கவிசூலேச்வரர்
260 சாலிஹோத்ரேசவரர்
261 நிவேத்யேசவரர்
262 தண்டீச்வரர்
263 முண்டீசவரர்
264 யுவனேசவரர்
265 அஸ்வரதேசவரர்
266 பாகலேச்வரர்
267 குண்டகேச்வரர்
268 சம்புவேச்வரர்
279 சங்குகர்ணேச்வரர்
270 வலாஹகேசவரர்
271 சகிஷ்ணேசவரர்
272 வைத்யேச்வரர்
273 சம்பரேச்வரர்
274 ஆச்வலாயனேச்வரர்
275 ஜதுகர்ணேச்வரர்
276 சோமசர்மேச்வரர்
277 குமாரேச்வரர்
278 லோகவத்ஸலேச்வரர்
289 லகுளீச்வரர்
280 கங்காவரேச்வரர்
281 தீர்த்தேச்வரர்
282 விஸ்வநாதேச்வரர்

284 ஓதபுரீச்வரர்
285 ஓத்திச்வரர்
286 ஸ்ரீத்திச்வரர்
287 அம்பிகாவனேச்வரர்
288 மங்களேச்வரர்
289 கங்கணேச்வரர்
290 கடகேச்வரர்
291 கௌசிகேச்வரர்
292 அனந்தருத்ரேச்வரர்
293 சூக்ஷ்மருத்ரேச்வரர்
294 சிவோத்தமருத்ரேச்வரர்
295 ஏகநேத்ரருத்ரேச்வரர்
296 ஏகருத்ரேச்வரர்
297 திரிமூர்த்திருத்ரேச்வரர்
298 ஸ்ரீகண்டருத்ரேச்வரர்
299 சிகண்டிருத்ரேச்வரர்

ஸ்ரீமயானேச்வரர்
ஸ்ரீஏகாம்ரநாதேச்வரர்
ஸ்ரீஸ்வச்ச ஏகாம்பரநாதேச்வரர்
ஸ்ரீமோகன ஏகாம்பரநாதேச்வரர்
ஸ்ரீபத்திர ஏகாம்பரநாதேச்வரர்

---

## திருமால்கள்.

1 வைகுண்டப்பெருமாள்
2 சுவேதப்பெருமாள்
3 பச்சைவண்ணப் பெருமாள்
4 பவழவண்ணப்பெருமாள்
5 வரதராஜப்பெருமாள்
6 தீபப்பிரகாசப்பெருமாள்
7 அஷ்டபுஜப்பெருமாள்
8 யதோத்காரிப்பெருமாள்
9 உலகளந்தப்பெருமாள்
10 பாண்டவ தூதப்பெருமாள்
11 உருகுமுள்ளப்பெருமாள்
12 நிலாததுண்டப் பெருமாள்
13 கள்ளப்பெருமாள்
14 ஸ்திதப்பெருமாள்
15 ஆசனப்பெருமாள்
16 சயனப்பெருமாள்
17 நரசிங்கப்பெருமாள்
18 திருப்பாடகப் பெருமாள்

உ.

திருச்சிற்றம்பலம்.

# ஸ்ரீ ஏகாம்பரநாதராலயத்திலுள்ள மூர்த்திகள்.



## முதலாம் ஆவரணம்.

### ஏகாம்பரநாதர்:

காமாக்ஷிதேவியாரால் பூஜிக்கப்பட்டவர். தீர்த்தம்-சிவக ங்கை-கம்பாநதி. உமாபத்திரை, கீர்த்திமதி. விருக்ஷம்—மா

உலகமாதாவாகிய உமாதேவியார்,—தமக்குப்போகபூமி யாகிய மந்தரமலையில் போகார்த்தமாய் வீற்றிருக்கின்ற சிவ பெருமானோடு போகலீலாவினோத இன்பரசங்களை நுகா ந்த பின்னர் பெருமானுங் களித்திருக்கும் களிப்பை நோக் கி மீதூர்ந்தகளிப்புடையவராய்,

மும்மைப்புவனங்களுஞ் செய்தவப்பேறுமுற்றச
சமைந்ததிரைநீருடை மேதினிதோற்றமெய்தச்
செம்மைத்திசையெட்டினுந் தென்றிசைமிக்குவெல்க
மம்மர்த்தொகைநூறிய வண்டமிழ்நாடுவாழ்க

நலமன்னியதண்டக நாடுசெழித்துமல்கப்
பலரும்புகழ்காஞ்சி வளம்பதிமேன்மைசாலக்
குலவுஞ்சமயங்க ளோராறுமகிழ்ச்சிகூற
வுலகெங்கணும் வைதிகசைவமுயர்ந்துமன்ன.

எவ்வெத்தவத்துஞ் சிவபூசனையேற்றமென்னப்
வெள்ளப்புனல்சூழ்படி மேலவர்தேறியுய்யத்
தெவ்வுத்தொழில்பூணு மறக்கடைதேயநல்கூ
ரெவ்வத்திறநீங்கி யுயிர்ப்பயிரெங்குமோங்க.

முப்பான்முதலிட்ட விரண்டறமுந்தழைப்ப
வெப்பாலுலகத்தொளி யாவையுமெம்பிரானார்
தப்பாவிதியின்னொளிச் சால்பெனயாருங்காண
வப்பார்சடையாரடித் தொண்டரகங்களிப்ப.

ஓர் விளையாட்டை எண்ணிப்பின்புறத்தே சென்று தமது இருகொங்கைகளும் அழுந்தத்தழுவி இரண்டுகண்களையும் இருகரங்களாலும் மூடிமறைத்தனர். மறைப்பவே உலகமெல்லாம இருள்மூடியது. அது மூடவே ஆன்மாக்களனைவரும் உயிர்க்குறுதி பயப்பனவாகிய தவந் தானம் ஞானம் அர்ச்சனை முதலியயாவும் இழந்தவர்களாய்ப் பதிதராயினர். ஆகவே பாவம்மேலிட்டு அம்மையாகிய உமாதேவியைப் பற்றியது. பற்றவும் அழுகெல்லாந் திரண்ட திருமேனிகறுத்து விளையாட்டொழிந்து வினையாய்முடிந்தது. முடியவே உமாதேவியார் திருவுளநடுங்கி இருகரங்களையும் எடுத்து பெருமானைப்பணிந்து யானுய்யுமவகை யருள்செய்வாயென்று வேண்டினர். வேண்டவும இறைவனுர் தேவியைநோக்கி எமக்கும் நின்றனக்கும் நந்தம் அகத்தடியவர்க்கும் சூரியனை இருளணுகாததுபோல் பாவம் அணுகுவதில்லையாயினும் நாமிருவரும் உலகிற்கு அம்மையப்பரா யிருத்தலினுல் அவ்வுலகினராகிய மக்கட்குரிய விதிவிலக்குக ளித்தன்மைத் தென்பதும் பாவபுண்ணியம் இத்தன்மைத்தென்பதும் பரிகாரங்களாயுள்ளவை இவையென்பதும் நாம் காட்டினுலன்றி அவற்றறிய வல்ல ரல்லராகலான் இப்பொழுது என்னுல் விதிக்கபடும் விதியைக் கைக்கொண்டு அவ்வழியேநடந்து இப்பழியைப் போக்கடித்துக்கொள்வாயென்று சிவார்ச்சனையையும, சிவத்தியானத்தையும, சிவதோத்திரத்தையும், சிவபஞ்சாக்கர ஜபத்தையும், சிவனடியார் வழிபாட்டையும் அனுக்கிரகஞ் செய்து இவையிற்றை நமக்கினிய காஞ்சிநகரின்கண் செய்வாயென் றேவினர். ஏவியவண்ணமே காஞ்சிநகரின்கண் வந்து காமகோட்டத்தில் தவமும் முப்பத்திரண்டறமும் வழுவாது செய்து வந்து மாவடியின்கண் சிவார்ச்சனை முதலிய ஐந்தையும் விடாதுசெய்து அன்று மந்தரமலையில் பின்புறந்தழுவி மனங்களித்தது போல் என்றும் பக்கத்திருந்து திருவேகம்பரைத் தழுவி இன்புற்று அப்பெருமானை ஏத்திவழிபடப் பெற்றனர்.

## இரண்டாம் ஆவரணம்.

### *, வெள்ளக்கம்பர். கள்ளக்கம்பர். நல்லகம்பர்.

சிவபெருமான் கச்சிமயானத்தின்கண் சைவ வேள்வி செய்து முடித்த பின்னர் சிவசத்தி லலிதாதேவி என்னுந் திருநாமங்கொண்டு வெளிப்பட்டு யாவும் படைக்கத் தொடங்கிய பொழுது அவரது முக்கண்ணினுந்தோன்றிய மும்மூர்த்திகளுள் பிரமனால் பூசிக்கப்பட்டவர் (வெள்ளக்கம்பர்) திருமாலால் பூஜிக்கப்பட்டவர் (கள்ளக்கம்பர்) உருத்திரரால் பூசிக்கப்பட்டவர் (நல்லகம்பர்) இம்மூவருள் ஏகாம்பரநாதருக்கு வலப்பக்கத்தில்வெள்ளக்கம்பர். இடப்பக்கத்தில் கள்ளக்கம்பர். ஈசானத்தில் நல்லகம்பர்.

தென்பக்கத்தில்,—

### அகத்தீச்வரர்,—

விந்தமலையின் இறுமாப்பை யடக்கத்தேவர்கள் வேண்டியவாறு காசியில் வசித்திருந்த அகத்தியமுனிவர் காஞ்சிக்கு வந்தபோது அக்காஞ்சி சான்றோரை யுடைத்தாயிருக்குஞ் சிறப்பைநாடி இவ்விடத்தில் நாம் தேவர்கள் சொல்லிய வண்ணம் வெளிப்படுத்த வெண்ணியிருக்கும் இனிமையுடைத்தாகிய தமிழை வெளியாக்கல் வேண்டும் என்று பூசித்தனர்.

ஷை - மேற்பக்கத்தில்,—

### அஷ்டோத்தரசதலிங்கம். (108)

† உமாதேவியார் பதரிகாச்சிரமத்தில், சிவாஞ்ஞையால் யோகதண்ட முதலியவைகளோடு சிவார்ச்சனைக்காகத் தாம் பெற்று வந்த மணல் காஞ்சிக்கு வந்தபோது இலிங்கரூபமானவைகள். இந்த லிங்கங்களுக்கு நிருதிதிக்கிலுள்ள விநாயகக்கடவுளும், வாயுதிக்கிலுள்ள முருகக்கடவுளும் காமாக்ஷி

* சுவசயம்யேகாம்பரநாதர். மோகன ஏகாம்பரநாதர். பதரயேகாம்பரநாதர். இந்நாமங்கள் வடமொழியிற்கண்டது.† இந்தச்சரித்திரம்-காமாக்ஷி ஷீலாபிரபாவத்தில் 8-வது அத்தியாயம் ஈசாலேசப்பிரபாவத்திலுள்ளது.

தேவியாரால் ஏகாம்பரநாதரைப் பூசிப்பதற்கு முன்னுகப்பூசிக்கப்பட்டவர்கள்.

ஷெ வடப்பக்கத்தில்,—

மார்க்கண்டேச்வரர்.

மார்க்கண்டேய முனிவர் ஓர்காலத்தில் சலப்பிரளயம்வந்தபோது அதில் நீந்தி வருந்து ஓர்புகலிடங்காணுது மனம்வருந்திப்பார்க்கக் காஞ்சியிலுள்ள வேதசொரூபமாகிய மாவிருக்ஷம் வளர்ந்து சலப்பிரளயத்தின்மேல்தோன்றிற்று. அது கண்டு அதனைப்பிடித்துக் கொண்டு காஞ்சியிலிருந்து ஆம்பரமாகிய மாவையும் ஆமபரநாதரையுங் கண்டு களித்துப் பின்னர் தமது பெயரால் பூசித்தனர்.

மத்தளமாதவேஸ்வரர்

மாதவராகிய திருமால் தில்லையில் திருநடனங்கண்ட காலத்தில் நந்தியாதியர்போல் தானும் மத்தள முழக்கவேண்டுமென்று நடராசப பெருமானை வேண்ட அவர் நீ வேண்டிய இதனைப் பெறவேண்டுவையாயின் காஞ்சியின்கண் சிவலிங்கப்பிரதிட்டைசெய்து இவ்வரம்பெற்று இங்குவந்து மத்தள முழக்குவாயென்றருள அவ்வண்ணமேவந்து பூசித்தனர்.

கீழ்ப்பக்கத்தில்,—

நிலாத்திங்கட்டுண்டப்பெருமாள்.

இவர்பாற்கடலிற்றேன்றிய விடச்சுவாலையினுல் சரீரம் தபிக்கப்பெற்றகாலத்தில் சிவாஞ்ஞையால் நீ என்முன் இங்கிருக்கப் பெறுவையாயின் என்சடையிலுள்ள சந்திரனுடைய நிலவானது உன்மேற்படும். அதுபடுமாணுல் இந்தவெப்பம் நீங்குமென்றருள அவ்வண்ணமே நின்றனா. இவ்விடம் திருமாலுக்குரிய திருப்பதிகளிலொன்று இந்த முதலாம ஆவரணத்தில வடக்கில் கீர்த்திமதி என்னுமதீர்த்தம் இது ஏகாம்பரநாதருடைய பூஜைக்குரியது அக்னிதிக்கில் மடைப்பள்ளியில் உமாபத்திரையென்னுந் தீர்த்தம். இது காமாக்ஷி

தேவியார் ஸ்நானஞ் செய்தற்குரியது. இவ்விரண்டுங் கிண
றுகள்.

### ௩றும் ஆவரணம்.

மேற்பக்கம்,—நிருதிமூலையில் (108) இலிங்கத்தோடு கூடியுள்ள ஒரு சிவலிங்கம், வாயுமூலையில் (1000) இலிங்கத்தோடு கூடியுள்ள ஒரு சிவலிங்கம், இதன்மத்தியில்மணகோலநாதராகிய ஏகாம்பரநாதரும், மாவிருக்ஷமும், மாவடிகந்தப்பரும், ஏலவார்குழலியாரும் உள்ளார்.

கந்தப்பர் மாவடியின்கண் வேதசொரூபமாகிய மாமரத்தின்கண் சித்தாந்தச் சுவையோடுகூடிப் பழுத்திருக்கும் வேதாந்தக் கனியை யுண்பதற்கு வீற்றிருக்கின்றார். * ஏலவார்குழலியார்கங்கையே அத்திருவுருவமாகவந்தவர்.

வடதுபக்கம்,—பிரளயபந்தனி - இந்தச்சத்தி கம்பாநதியானது சிவபெருமானுடைய ஆணையால் வெள்ளமாய் வர அதனை ஏகாம்பரநாதரைப் பூசிக்கின்ற காமாக்ஷிதேவியார்கண்டு தனது சேடியருள் ஒருசத்தியையழைத்து இவ்வெள்ளத்தைத்தடுப்பாயென்று கட்டளையிட அந்தச்சத்தி தான்வைத்திருந்த விஸ்வபக்ஷண மென்னுங்கபாலத்தில் அவ்வெள்ளத்தையடக்கினவள்.

நடராஜமூர்த்தி தில்லையின்கண் திருமாலுக்கு மதத்தைமுழுக்கக் காஞ்சிக்குப்போகும்படி அருள்செய்தபொழுது திருமாலைப்பார்த்து நாம் இத்தில்லையில் சிற்சபையைமாத்திரம் சிதாகாசமாகக்கொண்டு நடனஞ்செய்கின்றோம். காஞ்சியில் அவ்வெல்லைமுற்றும் பரவெளியாகக் கொண்டு ரக்ஷாதாண்டவஞ் செய்கின்றோம். அந்தக்காட்சியை நீ அங்குக்காணலாமென்று கட்டளையிட்டவண்ணம் ரக்ஷாதாண்டவத் தெரிசனங் கொடுத்தருளினவர்.

* இது காமாக்ஷிலீலாப்ரபாவத்திற்காண்க.

### கருந்தடங்கண்ணி.

இவ்வம்மை காமாக்ஷிதேவி கவுரியாரானபோது அவரது திருமேனியினின்று நீங்கிய கரியகோசம்.

### நான்காம் ஆவரணம்.

துவஜஸ்தம்பத்தானத்தில்,— கச்சிமயானர்.

பூர்வத்தில் பந்தகாசுரன் என்னும் ஓரசுரன் திருமால் முதலிய யாவருள்ளுங் கலந்து அவர்களுடைய வீரியங்களை யுண்டுவருமபொழுது அதனையறிந்துகொள்ளாத திருமால் முதலியோர் கைலாயத்திற்சென்று பெருமானைப்பணிந்து நாங்கள் இறக்கவேண்டியகாலம் வருவதற்குமுன்னமே இறந்துபோகும்படியானகதி எங்கட்கு வந்திருக்கின்றது காரணம் அறியோமென்று இரந்துகூறப் பெருமான் காரணங்கூறி யாவரையுங் காஞ்சியில் சைவயாகத்துக்குரிய திரவியங்களாக வரச்செய்து தாம்உமாதேவியாருடன் யாககர்த்தாவாக எழுந்தருளியிருந்து யாகாக்னியையுண்டாக்கி அதில் யாகத்திரவியரூபமாயிருக்கின்ற தேவர்களையெல்லாம் இட்டுச்சுட்டெரித்தனர். எரிப்பவே அவருள்ளிருந்த பந்தகாசுரன் நாசமடைந்தனன் உலகமும் நாசமுற்றன அதனால் அவ்விடம் மயானமாயிற்று. அக்கச்சிமயானத்தில் யாகாக்கினியாய்ச் சொலித்துக்கொண்டிருந்த சிவபெருமான் இலிங்கரூபமாயினர். அக்காரணத்தால் கச்சிமயானேச்வரர் எனப்பெயர்பெற்றனர்.

வாலீஸ்வரர் (கச்சிமயானத்துக்குக்கீழ்பால்.) தேவேந்திரன் மகனாகிய வாலி தன்னைப்போரில் யாவரெதிர்ப்பினும் அவரது பலத்தில் தனக்குப்பாதியும், தோல்வியில்லாத வெற்றியும் வரவேண்டுமென்று பூசித்தனன். அச்சுயம்புமூர்த்தி வாலியின் வால்தழும்பும் பெற்றுள்ளார்.

பைரவராலயம் (வாலீச்சரத்துக்குக் கீழ்பால்)

சிவகங்கை—சிவபெருமான் சைவயாகஞ்செய்யத்தொடங்கியபொழுது தமது வலக்கைவிரல் நகங்களால் பறித்து

ஓர் குண்டமாக்கி அதில்கங்கைபோல் வாமதேவமூர்த்தியை மெய்யாகப் பூசிக்கப்பெற்றதனால் சிவகங்கை எனப்பெயர் பெற்றது.

தென்பக்கத்தில்-விஷ்ணுவேச்வரர். சரச்வதி மண்டபம்

திருப்பாற்கடலிலிருந்து திருமால் தன்மனையாட்டி முதலாயினருடன் தில்லையில்வந்து திருநடனங்காணத் தவம்புரியுங்கால் தில்லைநாதன் திருக்காஞ்சியில் எம்மைவழிபட்டு வருவையாயின் இங்கு எமது நடனங்காணப் பெறுவாயென்று கட்டளையிட அவ்வண்ணமேவந்து பூசித்தனர்

இடபேச்வரர். (சிவகங்கைக்குக்கீழ்ப்பக்கத்தில)

வைகுண்டத்தில் திருமால் தன்னிடத்தில் செருக்குற்ற கருடனையடக்கும்பொருட்டு கைலைக்குச்சென்று கருடனை இடபதேவரிடத்தில் விட்டுவிட்டுத் தான் இறைவன் தெரிசனார்த்தமாய் உள்ளேசெல்லும்பொழுது இடபதேவருக்குக் குறிப்பால் தம்மெண்ணத்தைத் தெரிவித்துச் செல்ல அவர்குறிப்பை இடபதேவர் அங்கீகரித்துத் தாம் உறங்குபவர்போலுறங்கி பெருமூச்செறிந்து அந்தமூச்சில் கருடனையலைத்தலைத்து வருத்தியிருப்ப அதனைச்சிவபெருமானறிந்து நமதாணையின்றி இச்செயலைச்செய்தபடியினால் இதுபெருங்குற்றம், இதனைக்காஞ்சியில் எம்மை வழிபட்டு ஒழித்துக் கொண்டு இங்குவரக்கடவாயென்று கட்டளையிட அக்கட்டளைப்படியே இங்குவந்து பூசித்தனர்.

ஐந்தாம் ஆவரணம்.

(விகடசக்ர விநாயகர் ஆயிரக்கால் மண்டபத்தில்)

இவர் விஷ்வக்சேனனது விகடக் கூத்தைக் கண்டு திருமாலுக்குச் சக்ரதானஞ் செய்தவர்.

ஏகாம்பரநாதர் சந்நிதிவீதி, கீழண்டைவாடை,—

மாதலீச்வரர். ஸ்ரீ ராமருக்கு இந்திரன் தேரப்பாகனுக் அனுப்பிய மாதலி என்பவன் பூசித்தது.

மங்களேச்வரர் மங்கள தீர்த்தத்துக்கு மேற்புக்கம் காமாக்ஷிதேவியின் தோழியாகிய மங்களை என்பவள் பூசித்தது.

கம்பாநதி.

இராமேச்வரர். (ஆதிசைவர்கள் அக்கிரகாரக்கோடி,)—ஸ்ரீ ராமர் ராவணசங்காரஞ்செய்து சேதுவில் சிவலிங்கப் ப்ரதிஷ்டைசெய்து பூஜித்தும் எஞ்சிநின்ற தோஷத்தைப் போக்கடித்துக்கொள்ள அந்த ராமநாதரானையால காஞ்சிக்கு மீண்டும்வந்து பூசித்தனர்.

மேலண்டைவாடை.

அநந்தபத்மநாபேச்வரர். லிங்கப்பன் தெருவில்.

வைகுண்டநாதராகிய திருமால் ஓர் காலத்தில் கயிலாயநாதரிடத்தில் போனபோது சிவனும் சிவையும் லீலாவினோதமாய்ச் சூதாடுகருவிகள் கொண்டு சூதாடிக்கொண்டிருப்ப அவ்வாட்டத்துக்குத் தான் நடுவாய்நின்று வெற்றிகொண்ட உமாதேவியாரது வெற்றியைக் கூறாமல் தோல்வியடைந்த போது சிவனார்பக்கமாய் அவருக்குவெற்றிகூற அண்ணனே! நீ பொய்கூறினாய் உன்னுடைய நாவானது இரண்டாய்விடட்டும் ஆகையால பிளவுபட்ட நாவைப் படைத்துள்ள பாம்பாகப் போகக்கடவாயென்று சபிக்க அக்கணமே பாம்பாகி அனந்தனென்று பெயர்பெற்றுக் காஞ்சிக்கு வந்து அவ்வுருவம் நீங்கப் பூசித்தனர்.

பாண்டவதூதேச்வரர். (கண்ணுமபுக்காரத் தெருவில்)

கிருஷ்ணமூர்த்தி பிருகுமுனிவர் சாபத்தால் தனக்கு வந்த பிறவித்துன்பத்தை எண்ணி இனிப் பிறவித் துன்பம்வாராவண்ணம் பிறவி எப்பொழுதும் இல்லாதவனாகிய சிவபெருமானைப் பூசித்தல்வேண்டுமென்று பூசித்தனர்.

ஜ்வரஹரீச்வரர்.

தேவர்கள் சிவபெருமானுடைய வீரியத்தைவேண்டியுண்ட பின்னர் அதன்வெப்பத்தைத் தாங்கமுடியாது

சுரநோயுண்டாய்விட அந்நோய் நீங்கித் தங்கட்குத தணி வுண்டாமாறு வந்து பூசித்தனா.

தான்றோன்றீச்வரர்.

உபமன்னியமுனிவர் தமது பிதாவாகிய வியாக்கிரபாத ருடைய உத்தரவின்படி தில்லையைவிட்டுக் காஞ்சிக்குவந்து காமதேநுவின் பால்போல் இனியபாலுண்ணவேண்டிப பூசித்தனர்.

சர்வதீர்த்தம்.

இலக்ஷ்மணேச்வரர். சீதேச்வரர் சுக்கிரீச்வரர் அநுமந்தேச்வரர். விபீஷணேச்வரர். இலக்குமணர் முதலியோர் ஸ்ரீ ராமருடன் வநதபோது ராவண யுத்தத்தில் வந்ததோஷததை ராமர் சிவார்ச்சனைசெய்து பரிகரித்துக்கொண்டது போல் தங்களுக்குண்டாகிய தோஷங்களையும் போக்கிக்கொள்ளத் தனித தனியே தங்கள் தங்கள் பெயரால் பூசித்தனர்.

கங்காவரேஸ்வரர்.

கங்கைமுதலிய புண்ணிய நதிகள் ஓர்காலததில் வந்து தங்களிடத்தில் படிந்துள்ள பாவங்களைப் போக்கிக்கொள்ளப் பூசித்து இனிப்பாவங்கள் வந்து அணுகாதிருக்கவும் வந்து பூசித்தன.

விச்வேச்வரர்

காசியின்கண் வாழும் விசுவநாதர் காஞ்சியே இக்காசியினுஞ் சிறந்த இனிமையானதென்று வந்து வாழ்ந்தனர்.

காமீச்வரர்.

சிவபெருமான் நெற்றித் தீப்பொறியால் அநங்கனாய்ப் போனமன்மதன் திருக்கலியாணகாலத்தில் நினைக்கவந்த போது அவன் இறைவனை வணங்கி யான்யாவருக்கும் சந்தானவிர்த்தியுண்டாதற் கேதுவாகிய காமத்தை விளைவிக்கவும்,

காமியார்த்தமாய்ப் பிரருக்கிவோரும் ஏற்போருமாகிய இருவருள்ளத்து மிருந்து கொடுப்பதற்கும் ஏற்பதற்குமான ஆசையை விளைவிக்கவும், என்னுணையை மூன்றுலகத்தாரும் கடவாதிருக்கவும் வேண்டுமென்று வேண்டச, சிவபெருமான காஞ்சியிலளிப்போ மென்று சொல்ல அவ்வண்ணமே வந்து பூசித்தனன்.

தீர்த்தராஜேச்வரர்.

காமாக்ஷிதேவியார் பூசனைசெய்யுங்காலத்தில் சிவபெருமானேவிய தீர்த்தங்களெல்லாந் திரண்டு வேகமாய்வந்துபெருமானைக் காமாக்ஷிதேவியார் தழுவியிருந்தலைக்கண்டு வேகமடங்கித் தாமும் சிவார்ச்சனைசெய்ய ஆசைகொண்டு தீர்த்தராசனென்று பிரதிஷ்டைசெய்து பூசித்தனர்

வருணேச்வரர்.

தீர்த்தங்களெல்லாம் தீர்த்தராசனென்று சிவபெருமானைப் பூசித்துப் பேறுபெற்றதை வருணன் கண்டு தான் தண்ணீருக்குத் தலைவனாகவேண்டுமென்று பூசித்தனன்.

இரணியகசிபேச்வரர்.
இரணியாக்ஷேச்வரர்.
பிரகலாதேச்வரர்
மாவலீச்வரர்.
விரோசனேச்வரர்.

இவ்வைவரும் மனிதர்களாலும், மிருகங்களாலும், பறவைகளாலும் ஏனைய பிறவியுடையவர்களாலும் ஆயுதவகைகளாலும் எந்தப்பொழுதிலும் இறவாதிருக்க இரணியன் முதலிய ஐவராலும்பூசிக்கப்பட்டவர்.

சந்திரேச்வரர். * சந்திர புஷ்கரணியின் கீழ்பால்.

சந்திரன், சூரியன்முதலிய எண்மர்களோடு தானும் ஓர் கிரகமாயிருக்கப் பூசித்தனன். சந்திரபுஷ்கரணி என்கிற தீர்த்தமும் இவனால் உண்டாக்கப்பட்டது.

சர்வதீர்த்தத்துக்குமேற்கில் † ஈஸ்வரகோட்டத்தில்.

---

* இது ஈயப்பிள்ளையார் கோயிலென வழங்கிவருகின்றது.
† இது வெள்ளைக் குளமென வழங்குகின்றது.

முப்புராரிக்கோட்டம்.

சுதர்மேச்வரர்.
சுசீலேச்விரர்
சுபுத்தேச்வரர்.

திரிபுராதிகள் தங்களுடைய முப்புரங்களைச் சிவபெருமான் எரித்த பின்னர் அப்பெருமானை எங்கள் மூவருள் இருவர் உனது வாயிற் காவலாளிகளாகவும், ஒருவன் மத்தளமுழக்கவுமாக அருள்செய்ய வேண்டுமென்று பிரார்த்திக்கத் திரிபுராரி காஞ்சியில் எம்மையருச்சிப்பீராயின் அப்பணி கிடைக்குமென்ன அவ்வண்ணமே வந்து பூசிக்கப்பெற்ற மூர்த்திகள்.

பஞ்சிப்பேட்டை.

சலந்தரேச்வரர் (சர்வதீர்த்தத்துக்கு வாயுமூலையில்).

சலந்தராசுரன் ஆண்மையும் வன்மையும் எவவுலகும் ஆளவல்ல இறைமைத்தன்மையும பகைவரைவெல்லுந் திறமையும் சிவபிரானால் மரணத்தையும் வேண்டிப் பூசித்தனன்

ஓணேச்வரர். காந்தேச்வரர்.

சர்வதீர்த்தத்துக்குத் தென்பாலுள்ளது

ஓணன் காந்தன் என்பவர் இரண்டசுரர்கள் இவ்விருவரும் வாணாசுரனுடைய சேனைத் தலைவரா யிருந்து இவ்வுலக வாழ்வை வெறுத்துச் சிவபெருமானுடைய அன்புவேண்டிப் பிறவித் துன்பத்தை யொழிக்கப் பூசித்தனர் அவ்வாலயத்தருகிலுள்ள தீர்த்தம அவர்களாலுண்டாக்கப்பட்டது.

சேவந்தீச்வரர்.

வாயுதேவன் கந்தவாகனன் என்னும் பெயர்பெற செவ்வந்தி (சாமந்தி) மலர்களைக்கொண்டு பூசித்தனன் அதனால் செவந்தீச்வரரெனப் பெயர்பெற்றனர். இவ்விடத்தில் வயிரவ மூர்த்தியினுடைய சூலாயுதத்தினாலுண்டாக்கப்பட்ட சூலதீர்த்தமென்று ஒரு தீர்த்தமுளது.

நவக்கிரகேச்வரர். (பருத்திக்குளத்துக்குக் கீழ்பால்)

சந்திரன் நீங்கலாக ஏனைய எண்மர்களும் கிரகநிலைபெ றுதற்குத் தனித்தனி தங்கள் தங்கள்பெயரால் பூசித்தனா இவருள் சூரியமூர்த்தித் தலைவராதலால் பருதி என்கிற தன் பெயரால் ஒரு தீர்த்தமுண்டாக்கினர். அது பருதிக்குள மென வழங்கும்.

சுவர்ணலிங்கேச்வரர். (பொன்னேரியில்)

பிரம விஷ்ணுக்களால் பூஜிக்கப்பட்டவர். சுவயம்பு மூர்த்தி. இந்தமூர்த்தியைத் தொடப்பெற்றவர் பொன்னிற த்தைப்பெறுவர். சிலாரூபமாக அங்கு ஸ்பரிசவேதிகையெ னவொன்றுளது. அதுவுந் தொட்டவரைப் பொன்னுக்கல முதலிய பலமகிமைகளை யுடையது.

*சக்கரதீர்த்தம். (வெள்ளைகுளம் தென்பக்கம்.)

அபுனர்ப்பவேச்வரர். (பிறவாததானேச்வரர்.)

வாமதேவமுனிவ ரென்பவர் தாய்வயிற்றிருக்கும் பொ ழுதே பிறத்தற்கஞ்சி சிவபெருமானைத் தியானித்து என் னையனே! எனக்கு இவ்வண்ணம் கருவிற்பட்டுழலும் பிறவி த்துன்பத்தை யொழித்தருளல் வேண்டுமென்று பிரார்த்தி க்கச் சிவபெருமான் இரக்கமுற்று அவ்விடத்திற்றானே தலைகாணும் வண்ணஞ்செய்து அப்பனே! நீஇப்போது யாதொருதுன்பமு முறாது வெளிப்படுவாய் நீ பிறந்தவுட ன் காஞ்சிக்ஷேத்திரத்தை யடைந்து இனிப் பிறவாவண்ணா னென்னைப்பூசனை செய்வையாயின் நான்உன்னை இனிப் பிற வாவண்ணஞ் செய்கிறேனென்றருள அவ்வண்ணமே பூசித் து பிறவாநெறியளித்த பெருமானென வாழ்த்தினர்.

முத்தீச்வரர். (பிறவாத்தானேச்வரருக்கு மேற்கு)

முன்சொன்ன வாமதேவமுனிவர் காஞ்சியை விடாது வாசஞ்செய்து மரணமடையாது கைலைக்குச் சென்று அங் கு கைலாய நாதரிடத்தில் சிவலிங்கமொன்று தொடுத்தரு

* இவ்விடம் கோனேரிகுப்பமகிராம மென வழங்கும்.

ளப் பெற்று மீண்டுங் காஞ்சிக்குவந்து அவ் விலிங்கத்தைப் பிரதிஷ்டைசெய்து முத்தீசரென்னுந் திருநாமமிட்டுப் பூசித்தனர். (இவ்விடத்தில் ஞானதீர்த்தம்)

**இறவாத்தானேச்வரர்.** (ஏகாம்பரநாத ராலயத்துக்குக கிழக்கு.)

மார்க்கண்டேய முநிவர் யமபயம் தனக்குண்டாகா திருத்தற்கும் என்றும் முத்தராய் வாழ்தற்கும் பூசித்தனர்.

**மஹாலிங்கம்.** (இறவாத்தானேச்வரருக்குக் கிழக்கு)

அரிபிரமர்கள் ஓர் பிரளயத்தில் தாம் தாம் பரமென்று மன்றாடி நிற்ப இருவர்க்கும் பரமாயபரமன் மகாலிங்கமாய்த் தோன்றி இருவரையும் அபரங்களாக்கப பின்னர் இருவரும் முன்போல் உலகினர்க்குப் பரமாயிருப்பப் பூசித்தனர்.

**வீரட்டஹாஸேச்வரர்.**

ஓர்சங்கார காலமாகிய இரவில் சிவபரஞ்சுடர் உமாதேவியார்க்காண வீரமாகிய அட்டகாசத்துடன் ஆனந்த நடனஞ்செய்து புனருற்பவமாகிய உதயகாலத்தில் இலிங்கவுருவமாயினர். அக்காரணத்தால் வீராட்டஹாஸேஸ்வரரெனப் பெயர்பெற்றனர். அந்த விலிங்கமூர்த்தியை அநேக சித்தர்கள் பூசித்து அற்புதமான சித்திகளைப்பெற்றனர். கொங்கணமுநிவரென்பவர் இச்சிவலிங்க மூர்த்தியே இக்காஞ்சியில் சங்காரகாலத்தில் எல்லாவுலகங்களையும் நீறுக்கித் தன்னிடத்தில் ஒடுக்கிக்கொள்வது உண்மையாயின யான் வைத்திருக்கும் இக்குளிகையினை நீறுக்கி உட்கொள்ளல்வேண்டும் என்றுசொல்லி அக்குளிகையினை அம்மூர்த்தியின்மேல் வைத்தனர். உடனே அதுசாம்பராய் உள்ளே சென்றுவிட்டது. அதுகண்ட முநிவர் அந்தோவென்றதிசயித்து அவ்விடத்திற்றானே யிருந்து சாவசித்தியுந் தமக்குண்டாகப் பூசித்தனர். இவ்விலிங்கமூர்த்தியை ஓர்காலத்தில் இலக்ஷ்மிதேவியானவள் நாராயணரைப் பார்த்து நீர் சிவபெருமானைப்போலும் பவளமேனியரா யிருப்பீராயின்

பொன்னிறமுடைய எனக்குக்களிப்பாக விருக்குமென்ன அவர் பச்சவண்ணப்பெருமாளென இங்குவந்திருந்து பவளநிறம் பெறுவதற்குத் தன்னுடைய சக்கரத்தால் ஒரு தீர்த்த முண்டாக்கி நாடோறும் பதினாயிரந் தாமரைமலர்களால் பூசித்துப் பவளநிறம் பெற்றனர்

சக்கரதீர்த்தத்துக்குக் கீழ்ப்பக்கத்தில்,

பஞ்சபாண்டவேச்வரர்.

தருமர்முதலிய ஐவரும் துரோபதைசகிதமாய் உரோமசா, முற்கலர், வியாசர் முதலிய பலமுநிவருடன் தீர்த்தயாத்திரையாய்க் காஞ்சிக்குவந்தபோது வீராட்டகாசலிங்கமூர்த்தியினுடைய பெருமைகளைக்கேட்டு அந்தமூர்த்தியை வழிபட்டு இவ்வெல்லைமிக்க மகிமையுடைத்தான தென்றெண்ணித் தனித்தனியே தங்கள்தங்கள பெயரால் சிவலிங்கபிரதிஷ்டைசெய்து பூசித்து அவரவர்வேண்டிய சித்திகளை டைபெற்றனர்.

அதனால் பஞ்சபாண்டவர் பூசித்த ஐந்துலிங்கங்களையல்லாமல் ஏனைய துரோபதைமுதலியோரால் பூசிக்கப்பட்ட லிங்கங்கள்பல அவ்விடத்திலிருக்கின்றன. அவையெல்லாம் முன்னர் குறித்திருக்கும் ஈச்வரநாமங்களிற் காண்க

ஈசானேச்வரர். (பாண்டவேசத்துக்குக் கிழக்கு)

திக்பாலகரில் ஒருவராகிய ஈசானதேவர் ஈசானதிக்குக்குத்தலைவராயும் இந்திராதியெழுவருக்குந்தலைவராயும் இருத்தற்குப் பூசித்தனர்.

சிப்பீசர். (கீழண்டைராஜவீதி)

வித்தியாதர ரென்னும வேதிய ரொருவர் சைவானுஷ்டானத்திற் சிறந்தவராய் குபேரன்மகளாகிய ரேகாவதி என்பவளைக் கலியாணஞ்செய்துகொண்டு காஞ்சியில் வாழுநாளில் ரேகாவதி என்பவள் சிவபத்தியிற் சிறந்தவளாய் ஆயிரமுத்தாரங்களைக்கொண்டு நாடோறும் அர்ச்சித்துவர, சிவ

பெருமான் கருணைகூர்ந்து அங்குள்ள தீர்த்தத்தில் முத்துச்சிப்பிகள்தோன்றுமாறு அனுக்கிரகஞ்செய்ய அம்முத்தங்களைக்கொண்டு என்றும் ஆராதித்து வந்தனர்.

முத்துச்சிப்பிகள் தோன்றியபடியால் அத்தீர்த்தம் சிப்பிதீர்த்தமெனப் பெயர்பெற்றது.

கோனேரிகுப்பம். கம்மாளத்தெருவில்.

கங்கணேச்வரர். கடகேச்வரர். இவ்விரண்டுமூர்த்திகளும் உமாதேவியார் ஏகாம்பரநாதரைப் பூசிப்பதற்காகக் கங்கணமும் ரக்ஷையும் அணிந்துகொள்வதற்குத் தனித்தனியே பூசித்தனர்.

* துவக்கௌசிகேச்வரர் காமாக்ஷியம்பாள் கோயிலுக்கு ஈசானம்)

உமாதேவியார் திருக்கண்புதைத்த காலத்தில் தமக்குண்டாயிருந்த கறுமேனியைக் காஞ்சியில்வந்துகழிக்க அது கவுசிகி என்னுஞ் சத்தியாய்ப் பூசித்தமூர்த்தியார்.

கண்ணேச்வரர். (ஷை)

விடச்சுவாலையால் வெதும்பிப்போனமேனியைப் படைத்த திருமால் அவ்வெப்புநீங்கப்பூசித்தனர்

மஹாகாளேச்வரர். (மகாகாளர்கோயிலில்)

மஹாகாளனென்னும் ஓர் பாம்பு முத்தியடைய விருப்பங்கொண்டு சீகாளத்தியில் பூசித்துவர அக்காளத்திநாதர் காஞ்சியில் எம்மைப்பூசித்தால் முத்திகொடுப்போமென்றுசொல்ல வந்துபூசித்தது.

மோகினீச்வரர். (கண்ணீசர்பக்கலில்)

திருமால் மோகினியுருவங்கொண்டு அசுரரைமயக்கிய பாவமநீங்கப் பூசித்தனர்.

உருத்திரகோடீச்வரர். (மொட்டைக்கோபுரம்.)

---

* உடம்பாகிய சட்டை.

